# பகவத் பாதை

## BAGAVATH PATHAI

தமிழ் மாத இதழ்

மலர் 5 | இதழ் 4 | ஜூன் 10, 2018 | வருடச்சந்தா ரூ 100/- **Volume : 5 | Issue 4 | June 10th, 2018 | Annual Subscription Rs. 100/-**



| யோக சிகிச்சை - 3

# பகவத் பாதை
தமிழ் மாத இதழ்



“ நமக்கு உடம்பில் ஒரு காயம் இருப்பதாக வைத்துக்கொள்வோம். வலியே ஏற்படாத காயம் விரைவில் ஆறுமா? அல்லது வலியுடன் கூடிய காயம் விரைவில் ஆறுமா? வலியுடன் கூடிய காயம்தான் விரைவில் ஆறும். காயத்தை ஆற்றும் வழிமுறையாகத்தான் வலியும் அங்கே ஏற்பட்டுள்ளது.

காயம் என்பது பிரச்சினை. அதில் ஏற்படும் வலி என்பது பிரச்சினைக்கான தீர்வைக் கொண்டு வரும் ஓர் அம்சம்.

இப்படி நமது உடலில் ஏற்படும் உபாதைகள் அனைத்தும் நமக்கு உதவி செய்யவே வந்துள்ளன என்று எடுத்துக்கொள்வதுதான் யோக சிகிச்சையின் முறை.

**– ஸ்ரீ பகவத்**

ஸ்ரீ பகவத் மிஷன் குடும்ப உறுப்பினராகிய தங்களுக்கு வணக்கம்.

நமது ஸ்ரீபகவத் ஐயா அவர்களின் ஒருநாள் சிறப்பு ஞான முகாம் ஆயிரத்து ஐநூறு அன்பர்கள் கலந்து கொள்ள கூடிய சென்னை தேனாம்பேட்டையில் அமைந்துள்ள காமராஜர் அரங்கில் செப்டம்பர் 2ம் தேதி ஞாயிற்றுக்கிழமை நடைபெற உள்ளது. இது நாம் அனைவரும் அறிந்ததே. இந்த ஞான முகாமை சிறப்பாக நடத்துவது பற்றிய ஒரு கலந்தாய்வு கூட்டம் சென்னையில் மார்ச் 11ம் தேதி ஞாயிற்றுக்கிழமை நடைபெற்றது, இதில் 50 ஆர்வலர்கள் கலந்து கொண்டனர். இந்த நிகழ்ச்சிக்காக நாம் பல செலவுகளை எதிர்கொள்ள வேண்டியுள்ளது. இருப்பினும் இவ்வுண்மை அனைவரையும் சென்றடைய வேண்டும் என்ற நோக்கில் சலுகை கட்டணமாக ஒரு நபருக்கு ரூ 250/- என நிர்ணயித்துள்ளோம். ரூ. 250/- வழங்க முடியாத கலந்து கொள்ள ஆர்வமுள்ள அன்பர்களுக்கு அதனினும் குறைந்த, முடிந்த கட்டணத்தை பெற்றுக் கொண்டு அவர்களும் கலந்து கொள்ள செய்யலாம் எனவும் முடிவு செய்துள்ளோம். இந்நிகழ்ச்சிக்காக நாம் எதிர்கொள்ளும் செலவுகளை பயனடைந்த அன்பர்களின் பங்களிப்பை கொண்டு நிறைவு செய்யலாம் எனவும் முடிவு செய்துள்ளோம். **பல காலமாக அடைவதற்கு அரிதானதாக இருந்த மெய் ஞானத்தை ஸ்ரீபகவத் ஐயா அவர்கள் புரிதலாக எளிமையாக்கி நம் அனைவருக்கும் வழங்கிவிட்டார்கள்.**

இவ்வுண்மையை அனைவருக்கும் எடுத்துச் செல்ல வேண்டியது பயனடைந்த நம் அனைவரின் தலையாய கடமையாக கருத வேண்டுகிறோம்.

மனத்துயரமே புறத்தில் நம்மை முடக்கி துன்பத்தில் ஆழ்த்துகிறது. **மனித குலத்தின் மனத்துயரத்தை போக்க நாம் எடுத்திருக்கும் முதல் மாபெரும் முயற்சி இது ஆகும்.** இம்மாபெரும் முயற்சிக்கு அனைவரும் துணை நிற்க வேண்டுகிறோம். செலவுகளை எதிர்கொள்ள தங்களது பங்களிப்பை வழங்கிய அன்பு உள்ளங்கள்.

| | |
|---|---|
| திரு. **TMK. தியாகராஜன்**, சென்னை | -ரூ. 10,000/- |
| திரு. **சம்பந்தம் ஐயா - வடிவம்மாள் தம்பதியினர்**, அனைவரின் உணவுக்காக ஆகும் செலவுகள் | |
| திரு. **சபாபதி**, சென்னை | -ரூ. 5000/- |
| திரு. **ராம்லால்**, சென்னை | -ரூ. 20,000/- |
| திரு. **சிவகுரு - உமா சிவகுரு** தம்பதியினர், சென்னை | -ரூ. 6000/- |
| திருமதி **பொற்செல்வி**, சென்னை | -ரூ. 2000/- |
| திரு. **S. கணேஷ்**, சென்னை | -ரூ. 25000/- |
| திரு. **நாகராஜன்**, வெஸ்ட்மாம்பலம், சென்னை | -ரூ. 1000/- |

இவர்கள் அனைவருக்கும் உளமார்ந்த நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறோம். வாய்ப்புள்ள அன்பர்கள் தங்களது பங்களிப்பை வழங்குமாறு அன்புடன் கேட்டுக்கொள்கிறோம்.

மேலும் ஸ்ரீபகவத் மிஷன் குடும்ப உறுப்பினர்களாகிய நாம் அனைவரும் கலந்து கொள்வதோடு புதிய அன்பர்கள் அனைவரையும் கலந்து கொள்ள செய்யுமாறு வேண்டுகிறோம். இதற்காக முன் பதிவு தாளை (Ticket) ஸ்ரீபகவத் மிஷனோடு தொடர்புகொண்டு பெற்றுக் கொள்ளலாம். இத்தொண்டில் தங்களை இணைத்துக் கொள்ள ஆர்வமுள்ள அன்பர்கள் 50 Tickets கொண்ட புக்கை பெற்று மற்றவர்களுக்கும் வினியோகிக்கலாம். அனைவரது ஒத்துழைப்பையும் வழங்க வேண்டுகிறோம்.



**ஸ்ரீ பகவத் மிஷன், 9994205880, 97891 65555**

## உள்ளே



கூடுதல் தகவல்களைப் பெற விரும்புகிறீர்களா? அல்லது பாதையை நண்பர்களுக்கு அனுப்ப விரும்புகிறீர்களா?


Sri Bagavath Mission
Flow with the Flow
31, Ramalingasamy Street, Ammapet,
Salem - 636 003. Tamilnadu India
V.A.P. SHARAVANAN - 99942 05880
Dr. N. KAILASAM - 94432 90559
K.S. JEEVAMANI - 97891 65555
www.sribagavathmission.org
www.sribagavath.org
E-mail : sribagavathmission@gmail.com



This book Designed by
SRI ESPARI GRAPHICS, Salem-3.
Cell : 90926 46260, 98651 34075



# யோக சிகிச்சை – 3



- ஸ்ரீ பகவத்

யோக சிகிச்சை என்ற பெயரில் இதுவரை இரண்டு கட்டுரைகளை எழுதியிருக்கிறோம்.

அது தொடர்பான செய்திகள் இந்த மூன்றாவது கட்டுரையாக வெளிவருகிறது.

இந்தக் கட்டுரையோடு இணைத்து அந்தக் கட்டுரைகளையும் படித்திடுவதே முழுமையான ஒன்றாக அமையும்.

தலைவலி, உடல்வலி, காய்ச்சல் என நாம் பல விதமான உடல் உபாதைகளை எதிர் கொள்கிறோம். ஏதாவது ஒரு சிகிச்சையை மேற்கொண்டு அத்தகைய உபாதைகளிலிருந்து விடுபடுகிறோம்.

அந்த உபாதைகள் அனைத்தையும் நமது எதிரிகளாக்கி அவற்றை நம்மிடமிருந்து விரட்டித் துரத்திப் போராடுவது ஒரு வகையான அணுகுமுறை.

அந்த உபாதைகள் அனைத்தையும் நமது நண்பர்களாகவும், உறவினர்களாகவும் ஏற்று அவைகளோடு உறவு கொள்வது இன்னும் ஒரு வகையான அணுகுமுறை.

இந்த இரண்டாவது வகையான அணுகுமுறையைத்தான் யோக சிகிச்சை என்று நாம் குறிப்பிட்டு வருகிறோம்.

ஒரு முறை தேள் ஒன்று எனது விரலில் கொட்டி விட்ட சம்பவத்தை எனது முதலாவது கட்டுரையில் விவரித்திருந்தேன்.

அந்தத் தேள் வலியை எந்த எதிர்ப்புணர்வும் இல்லாமல் அமைதியாக கவனித்தேன்,

அப்படி அமைதியாகக் கவனிக்கும் போது, இடைவெளியே இல்லாத அந்த வலியுனுள் இடைவெளி தோன்ற ஆரம்பித்தது.

தொடர்ந்து கவனித்து வருகையில் அந்த இடைவெளி சிறிது சிறிதாக விரிவடைய ஆரம்பித்தது.

சற்று நேரத்தில் வலியற்ற இடைவெளி மட்டுந்தான் தெரிந்ததே தவிர, வலி முழுமையாக மறைந்து போய் விட்டது.

இப்படி நமக்கு ஏற்படும் வேதனை உணர்வுகளை நட்புணர்வோடு கவனித்து அதனோடு சேர்ந்து பயணிப்பதை யோக சிகிச்சை 1ல் விவரித்திருந்தேன்.

நேரில் சந்திக்கும் பலரிடமும் இதனை விவரித்திருந்தேன்.

என்னோடு தொடர்பிலிருந்த ருமேனியா நாட்டவர் ஒருமுறை என்னைச் சந்தித்துப் பின்வரும் சந்தேகம் ஒன்றைக் கேட்டார்.

"நமது உடலில் ஏற்படும் வலி உணர்வுகளை அமைதியாகக் கவனித்தால் அந்த வலி உணர்வுகள் நம்மிடமிருந்து போய் விடுமென்று நீங்கள் கூறியிருக்கிறீர்கள்...

"ஒரு முறை எனக்கு பல்வலி ஏற்பட்டது. நீங்கள் கூறிய அணுகுமுறையைக் கையாண்டேன். பல்வலி குறையவில்லை. நான் கையாண்ட முறையில் தவறு எதுவும் உள்ளதா?"

அப்போதுதான் அவரிடம் யோக சிகிச்சை முதற் பகுதியிலுள்ள விதிவிலக்கைப் பற்றிக் கூறினேன்.

"எந்த வலியை இப்படி அமைதியாகக் கவனித்தாலும் போய் விடும். ஆனால் பல்வலி மட்டும் விதிவிலக்கானது. பல்வலியை இப்படி நாம் கவனித்தோமானால் அது குறைவதற்குப் பதில் அதிகமாகிவிடும். வலியை எப்படிக் கவனிப்பது என்று, கவனிக்கும் முறைக்கு மட்டும் முக்கியத்துவம் கொடுத்து விளக்கியிருந்தேன். அதைப் புரிந்து கொள்வதில் குழப்பம் ஏற்பட்டு விடக்கூடாது என்று கருதியே, இந்த விதிவிலக்கான பல்வலி பற்றிக் குறிப்பிடவில்லை."

- இப்படி அவருக்கும் நான் விளக்கம் கொடுத்த தருணத்தில் யோக சிகிச்சை இரண்டைப் பற்றிய அனுபவம் எதுவும் எனக்குக் கிடையாது.

அதனால் அது பற்றி அவரிடம் எதனையும் கூற முடியவில்லை.

யோக சிகிச்சையின் இந்த இரண்டாவது அணுகுமுறையாவது பல் சம்பந்தப்பட்ட பிரச்சினைக்குத் தீர்வாக அமைந்திடுமா?

மூன்று வருடங்களுக்கு முன்னால் நடந்த சம்பவம் அது.

ஹைதராபாத்தில் ஞான முகாம் ஒன்றுக்கு ஏற்பாடு செய்திருந்தோம்.

நான் அப்போது சென்னையில் இருந்தேன். பயணம் புறப்படுவதற்கு இரண்டு நாட்கள்தான் இருந்தன. எனக்குப் பல்வலி ஏற்பட்டு விட்டது.

வலது பக்க கடைவாய்ப் பல் ஒன்று வலியெடுக்க ஆரம்பித்தது. ஏற்கனவே அந்தப் பல் பாதிக்கப்பட்ட ஒன்று தான். பல் மருத்துவர் அந்தப்

பல்லின் ஒரு பகுதியை சில வருடங்களுக்கு முன் அடைத்திருந்தார்.

அந்தப் பல் அதன் பிறகும் சில வேளைகளில் வலியெடுப்பதுண்டு. ஆனால் மறுநாள் அது சரியாகி விடும்.

இந்த முறை அப்படிச் சரியாகாமல் நீண்டு கொண்டே இருந்தது.

ஹைதராபாத் பயணம் புறப்படுவதற்கு இரண்டு நாட்களுக்கு முன்னால் வலி மிகவும் அதிகமாகி விட்டது.

பல்லை எடுத்து விடலாம் என முடிவு செய்தேன்.

ஆனால் பயணத்தின் போது இப்படிப் பல்லை எடுப்பது சரியா?

ஆகவே "வலியை சகித்துக் கொள்வோம். முகாம் முடிந்து வந்ததும் பல்லை எடுத்து விடலாம்" என்று முடிவு செய்தேன்.

பல்லை எடுக்கும் வரை இந்த வலியை என்ன செய்வது?

பல் வலிக்கு யோக சிகிச்சை ஒன்றாவது முறையினால் தீர்வு கிடைக்காது என்பது எனது அனுபவமாக இருந்ததால் அந்த முறையைச் செயற்படுத்தவில்லை.

அந்தக் காலகட்டத்தில் யோகசிகிச்சை இரண்டாவது பகுதியைப் பற்றியும் தெரிந்து வைத்திருந்தேன்.

யோக சிகிச்சை - 1 பல்வலிக்குப் பயன்படாது என்பது தெரியும்.

ஆனால் யோக சிகிச்சை -2 இந்தப் பல்வலிக்குப் பயன்படுமா என்பது எனக்குத் தெரியாது.

பல் வலியைப் பொறுத்த அளவில் யோக சிகிச்சையே உதவாது என்ற முடிவில் நான் இருந்த காரணத்தினால் தான் பல்லை எடுத்து விடலாம் என்ற முடிவில் இருந்தேன்.

ஆனாலும்கூட உடனடியாக பல்லை எடுத்து விட முடியாத நிலையில் இருந்ததால் யோக சிகிச்சையை நம்புவதைத் தவிர வேறு வழியும் இல்லை.

யோக சிகிச்சை - 1 ஐச் செயல்படுத்தினால் வலி அதிகரிக்கவே செய்யும் என்ற காரணத்தினால் அதனைப் பயன்படுத்தாமல், யோக சிகிச்சை-2 ஐ மட்டுமே பயன்படுத்தினேன்.

யோக சிகிச்சை 2 என்பது என்ன?

நம் மனதில் தோன்றும் தேவையற்ற உணர்ச்சிகளை நாம் அப்புறப்படுத்தத் தேவையில்லை. அவை அனைத்தும் தாமாகவே சமன்பட்டு விடும்.

இவ்வாறு நமது உடலுங்கூட, தான் சந்திக்கும் பிரச்சினைகளிலிருந்து சமன் செய்து கொள்ளும் ஆற்றலோடு தான் இருக்கிறது.

ஓர் அசைவற்ற நீர்த் தடாகம். அதன் மேற்பரப்பில் ஒரு கல்லைப் போடுகிறோம்.

கல்லானது. தான் விழுந்த இடத்தில் பள்ளம் ஒன்றை ஏற்படுத்தி விட்டு தண்ணீருக்கு அடியில் சென்று விடுகிறது.

கல் விழுந்ததால் ஏற்பட்ட பள்ளத்தைச் சுற்றிலும் அலைகள் ஏற்படுகின்றன.

இப்போது ஒரு கேள்வி. பள்ளத்தைச் சுற்றிலும் உருவான அலைகள் அந்தப் பள்ளத்தை பெரிதாக்கி விடுமா?

அல்லது சமன்படுத்துமா?

அந்தப் பள்ளம் சமன்படுவதற்கு அந்த அலைகள் உதவி செய்யுமா? அல்லது இடையூறு செய்யுமா?

அந்த அலைகள் யாவும் அந்தப் பள்ளத்தோடு தொடர்பு கொண்டவைகளேயாகும்.

அவை அனைத்தும் அந்தப் பள்ளம் சமன்படவே உதவி செய்யும்.

இப்படி நமது உடலில் ஏதாவது ஒரு பாதிப்பு ஏதாவது ஒரு காரணத்தினால் ஏற்படுவதாக வைத்துக் கொள்வோம்.

அந்தப் பாதிப்பை சரி செய்யும் அலைகளாக நம் உடலில் சில உபாதைகள் ஏற்படலாம்.

பல்வலியைப் பற்றி நாம் இங்குக் கூறுவதால் அதனையே ஓர் உதாரணமாக எடுத்துக் கொள்வோம்.

பல் வலியைப் பொறுத்த வரையில் எது பிரச்சினை?

பல்வலி பிரச்சினையா அல்லது அந்த வலிக்குக் காரணமான பல்லிலுள்ள வேறு ஏதோ ஒரு கோளாறுதான் பிரச்சினையா?

உண்மையில் பல்லில் ஏற்பட்டுள்ள ஏதோ ஒரு கோளாறு தான் உண்மையான பிரச்சினை.

அதனால் ஏற்பட்ட பல்வலி என்பது ஒரு விளைவு மட்டுமே.

- ஓர் அலை மட்டுமே.

இப்போது இன்னுமொரு கேள்வி.

நமக்கு உடம்பில் ஒரு காயம் இருப்பதாக வைத்துக் கொள்வோம்.

வலியே ஏற்படாத காயம் விரைவில் ஆறுமா?

அல்லது வலியுடன் கூடிய காயம் விரைவில் ஆறுமா?

வலியுடன் கூடிய காயந்தான் விரைவில் ஆறும்.

காயத்தை ஆற்றும் வழிமுறையாகத்தான் வலியும் அங்கே ஏற்பட்டுள்ளது.

காயம் என்பது பிரச்சினை.

அதில் ஏற்படும் வலி என்பது பிரச்சினைக்கான தீர்வு.

- தீர்வைக் கொண்டு வரும் ஓர் அம்சம்.

இரவில் நீங்கள் ஒரு தெருவில் நடந்து செல்கிறீர்கள்.

கொடுவாளுடன் ஒருவர் உங்களை நோக்கி ஓடி வருவதாக வைத்துக் கொள்வோம்.

நீங்கள் பயப்படுவீர்களா அல்லது மகிழ்வடைவீர்களா?

நிச்சயம் பயப்படவே செய்வீர்கள்.

இப்போது இந்த உதாரணத்தைச் சற்று மாற்றிக் கொள்வோம்.

இரவில் நீங்கள் அந்தத் தெருவில் நடந்து செல்கிறீர்கள். திருடன் ஒருவன் கத்தியைக் காட்டி மிரட்டி உங்களுடைய பணத்தையும் ஆபரணங்களையும் கேட்கிறான்.

நீங்கள், "திருடன்! திருடன்!" என்று கூச்சல் போடுகிறீர்கள்.

உங்கள் கூச்சலைக் கேட்ட அந்த தெருவிலுள்ள ஒருவர் உங்களைக் காப்பாற்றவும், அந்தத் திருடனை விரட்டவும்

கொடுவாளுடன் ஓடி வருகிறார்.

இப்போது உங்கள் இருவரையும் நோக்கிக் கொடுவாளுடன் ஓடி வரும் அவரைக் கண்டு பயப்படுவீர்களா

அல்லது மகிழ்வடைவீர்களா?

இப்படி நமது உடலில் ஏற்படும் உபாதைகள் அனைத்தும் நமக்கு உதவி செய்யவே வந்துள்ளன என்று எடுத்துக் கொள்வதுதான் யோக சிகிச்சை -2.

அன்று எனக்கு ஏற்பட்ட பல்வலிக்கு யோக சிகிச்சை - 2 ஐப் பயன்படுத்தினேன்.

எனக்கு உதவி செய்ய வந்த வலியாகவே எடுத்துக் கொண்டேன். அதனால் வலியை விரட்டி அப்புறப்படுத்த வலி நீக்கும் மருந்து எதனையும் எடுத்துக் கொள்ளவில்லை.

வலி குறைவதும் கூடுவதுமாகவே இருந்து வந்தது. இரவுத் தூக்கத்தைக் கூட அது பாதித்து விட்டது.

ஹைதராபாத்திலும் அந்த வலி தொடர்ந்தது. ஆனால் சிறிய அளவில் குறைந்தது.

சென்னை திரும்புவதற்குள் வலி நின்று விட்டது.

வலி நின்றுவிட்டதால் பல்லை எடுக்கவேண்டிய அவசியமும் ஏற்படவில்லை.

இது நடந்து மூன்று வருடங்களாகிவிட்டன.

அன்று போன பல்வலி இன்னும் திரும்பி வரவில்லை.

பிரச்சினைக்குரிய அந்தப் பல் பிரச்சினையற்றதாகி விட்டது.

மென்மையான உணவைச் சுவைத்துச் சாப்பிடும் அளவுக்கு அந்தப் பல் ஆரோக்கியம் பெற்று விட்டது.

யோக சிகிச்சை சம்பந்தமான எனது பயணத்தில் இன்னும்கூட சில செய்திகள் இருக்கின்றன.

அதனை இன்னுமொரு கட்டுரையில் தொடருவோம்.



# கவலைகள் அனைத்திற்கும் தீர்வு - புதிய பதிப்பு



இன்பங்கள் ஒருவனைப் பித்தனாக்கும்.
துன்பங்கள் ஒருவனைப் புத்தனாக்கும்.

அனைத்து அன்பு உள்ளங்களுக்கும் எங்கள் அன்பான வணக்கம்.

ஸ்ரீ பகவத் ஐயாவின் நூல்களில் பிரதான நூலான **கவலைகள் அனைத்திற்கும் தீர்வு** என்ற நமது நூல் உங்கள் அனைவரது ஆதரவுடன் பரிசளிப்பு விலையாக ரூ.**50**/-க்கு ஆங்கிலத்திலும், தமிழிலும் வெளியிட்டு வருகிறோம். இதற்கு 24 அன்பு உள்ளத்தினர் தலா ரூ. **10,000/-** வழங்கியிருந்தனர்.

அதன் காரணமாக பல்வேறு நபர்களுக்கு நமது கருத்துகளை வழங்கி உதவ முடிந்தது.

நாம் தமிழில் அச்சிட்ட இந்த நூல்கள் மட்டும் தீர்ந்து விடும் நிலையில் உள்ளது. இந்த நூலை நாம் மீண்டும் அச்சிட வேண்டியவர்களாக இருக்கிறோம்.

இதற்கு ரூ. **10,000/-** வழங்கும் **25** அன்பு உள்ளத்தினர் மட்டும் தேவைப்படுகிறார்கள் என வேண்டுகோள் விடுத்திருந்த நிலையில் இதுவரை ரூ. 10000 வழங்கிய அன்பு உள்ளத்தினர் :

திரு. **சங்கரநாராயணன்,** கும்பகோணம், திரு. **ஜெயராம்,** கனடா, **அக்கு பஞ்சர் மையம்,** மேற்கு மாம்பலம் **அக்கு ஹீலர் முத்துகுமார்,** திரு. **ஸ்ரீ சதானந்தம்,**திருச்செங்கோடு இவர்களுக்கு உளமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

இன்னும் 20 அன்பர்கள் தேவைப்படுகிறார்கள்.

மேலும் ஜீன் மாத இறுதிக்குள் அச்சிட வேண்டி இருப்பதால் ஜீன் 15 ஆம் தேதிக்குள் வரும் பங்களிப்பை வைத்தும் பற்றாக்குறையை கடனாக பெற்றும் அச்சிட்டு நன்கொடை வந்ததற்கு தகுந்தாற்போல் விலையை நிர்ணயம் செய்யலாம் என முடிவு செய்யப்பட்டுள்ளது.

இந்தப் பரிசளிப்பில் பங்கேற்க விரும்பும் அன்பு உள்ளங்கள் கீழ்கண்ட வங்கி கணக்கில் செலுத்தி 97891 65555 என்ற எண்ணில் தகவல் தெரிவிக்கவேண்டுகிறோம்.

**HDFC Bank Sri Bagavath Mission A/c No. 15907620000075, NEFT IFSC : HDFC 0001590 Car Street Branch, Salem** என்ற கணக்கில் செலுத்தலாம்.

அன்புடன் **ஸ்ரீ பகவத் மிஷன்,** சேலம். செல் : 99942 05880, 97891 65555

V.A.P. **சரவணன்,** சேலம்.
செல் : 99942 05880

# ? கேள்வி? பதில்...

நமது பிரச்சினையின் ஆணிவேர் எது?
நான் தன்மையில் இருந்து விடுபடுவது எவ்வாறு?

**கேள்வி :** புறத்தில் தான் பிரச்சினை இருக்கிறது. அதன் பாதிப்பு என்னவோ அகத்தில் தான் ஏற்படுகிறது. புறத்தில் அறிவை பயன்படுத்தி செயல் செய்து கொள்ள வேண்டும். அகத்தில் ஏற்படும் பாதிப்புக்கு ஒன்றும் செய்ய முடியாது என்பது புரிந்தாலும் சில நேரங்களில் என்னால் விடமுடியாமல் தவிக்கிறேன். அறிவு பூர்வமாக புரிந்து கொண்டால் போதும் என்பதும் புரிகிறது. எவ்வளவு தான் விளக்கங்களையும் புத்தகங்களையும் படித்தாலும் சில நேரங்களில் என்னுடைய 'நான்' தன்மை ஆட்சி செலுத்தி பிரச்சினையை தன்னுடைய கட்டுக்குள் கொண்டு வர வேண்டும் என்று முயற்சி செய்கிறது. ஏதாவது செய்தே பழகிய மனதிற்கு 'எதுவும் செய்ய முடியாது, செய்யத் தேவையில்லை' என்பதை ஏற்றுக் கொள்ள மறுக்கிறது. அகத்தில் நான் தன்மையின் ஆதிக்கம்தான் பிரச்சினைக்கு மூலக்காரணம் என்பதும் தெரிகிறது. நான் தன்மையின் ஆதிக்கத்திலிருந்து எப்படி விடுபடுவது? நான் என்பதை பற்றி மட்டும் இன்னும் கொஞ்சம் தெளிவு தேவைப்படுகிறது? விளக்கவும்.

**பதில் :** நமது பிரச்சனையின் ஆணிவேர் "நான்" என்ற தன்மையின் பிடியில் மட்டுமே உள்ளது. "நான்" என்ற தன்மையே தன்னுடைய இயலாமையை தகுதியை உணர்ந்து கொண்டு, தான் பிடித்துக் கொண்டிருக்கும் பிரச்சினையின் பிடியிலிருந்து விடுபட வேண்டும். பிரச்சினையை தீர்ப்பதிலும், தன்னுடைய கட்டுப்பாட்டிற்குள் கொண்டு வரவேண்டும் என்ற பொறுப்பிலிருந்தும் பொறுப்பற்ற தன்மைக்கு வந்துவிடும் போதுதான் பிரச்சினை தானாகவே ஓடி மறைகிறது. பிரச்சினையை பிடித்துக்கொண்டிருக்கும் "நான்" தான் பிரச்சினையின் ஆணிவேர் என்பது நமக்கு தெளிவாக புரிகிறது. உண்மையில் பிரச்சினை கூட பிரச்சினை இல்லை. பிரச்சினை உடையவனாகிய "நான்" பிரச்சினையில் இருந்து விடுபட எடுக்கும் முயற்சியே பிரச்சினை.

"நான்" தன்மையால் பிரச்சினையை ஒருபோதும் வெற்றிக் கொள்ளவே முடியாது என்ற தனது இயலாமையை உணர்ந்து கொண்டு அகத்தில் நிர்கதியாக நிராயுதபாணியாக "நான்" செயலற்று போய்விட வேண்டும்.

அகத்தில் எதுவும் செய்ய முடியாது என புரிந்துகொண்ட பிறகு அடுத்த கட்டமாக வெளிபுறத்தில் செய்வதற்கு என்ன வழி இருக்கிறது என்பதை அறிவைப் பயன்படுத்தி செயலில் ஈடுபடுகின்றோம். இங்கு "நான்" தன்மையே தன்னுடைய இயலாமையை புரிந்து கொள்வதே பிரதானம் - முதன்மையானது. அப்படி புரிந்து கொண்டதன் விளைவாக வெளிபுறத்தில் செயல்படுவதற்கு என்ன வாய்ப்பு உள்ளது என்பதை கவனிப்பது கூட தாமாக அமைந்து விடும்.

அகத்தில் நான் என்ற தன்மையின் ஆதிக்க பிடியிலிருந்து எப்படி விடுபடுவது என்பதை ஓர் உதாரணம் மூலமாக விளங்கி கொள்வோம்.

நாம் நல்ல வெயில் நேரத்தில் ஒரு மைதானத்தில் நிற்பதாக வைத்துக்கொள்வோம். நாமும் இருப்போம் நம் நிழலும் நம்மை தொடர்ந்து இருக்கும். நாம் நகர்ந்தால் நம்மை பின் தொடர்ந்து நமது நிழலும் நகரும். நாம் எங்கு போனாலும் நமது நிழலும் நம்மை பின் தொடர்ந்தே வரும். நம்மையும், நமது நிழலையும் பிரிக்கவே முடியாது. நாம், நமது நிழல் இந்த இரண்டில் எது நிஜம், எது நிழல் என்பதை நம்மால் பிரித்து புரிந்து கொள்ள முடியும் தானே? அதில் ஏதாவது கஷ்டம் இருக்கிறதா?

நம்மால் நிஜத்தையும், நிழலையும் எளிமையாக பிரித்துப் புரிந்து கொள்ள முடியும். நிஜத்திற்கு ஏற்றார் போல்தான் நிழல் அசையுமே தவிர நிழலின் அசைவுக்கு ஏற்றார்போல் ஒருபோதும் நிஜம் அசையாது. இதுவும் நமக்கு நன்றாக தெரியும்.

இந்த உதாரணத்தில் நிஜம் என்பது நாம் சந்திக்கும் யதார்த்தத்தையும், நிழல் என்பது அகத்தில் தோன்றும் நான் என்பதும் ஆகும். நாம் கண்களால் மரத்தை பார்க்கிறோம் என்றால் மரமும், மரத்தை பார்ப்பவன் என்ற நானும் சேர்ந்ததே ஓர் எண்ணமாக உணர்கிறோம். இதே அடிப்படையில் தான் ஒரு சப்தத்தை, வாசனையை, உடல் உணர்வை, சுவையை என எதை உணர்ந்தாலும் சப்தத்துடன் சேர்ந்த நான் கேட்பவனாகவும், வாசனையுடன் சேர்ந்த நான் நுகர்பவனாகவும், சுவையுடன் கூடிய நான் சுவைப்பவனாகவும், உடல் உணர்வுடன் கூடிய நான் உணர்பவனாகவும் என இந்த நான் என்பதை சேர்ந்தே தான் நாம் எல்லாவற்றையும் புரிந்து கொள்கிறோம்.

ஐந்து புலன்கள் வழியாக உணர்வதை மனதின் மூலம் நான் என்ற தன்மையாக உணர்கிறோம். புலன் என்பது நிஜம். மனதில் நான் என்ற தன்மையாக உணர்வது நிழல் அம்சமே ஆகும்.

நிஜத்தின் பிரதிபலிப்பே நிழல். அதேபோல் யதார்த்த உலகம் நிஜம். இதனால் அகத்தில் ஏற்படும் பாதிப்பு நிழல். நாம் நின்று கொண்டிருக்கும்போது நமது நிழல் புல் தரையிலும் விழலாம். சாக்கடையிலும் விழலாம். அதை நிர்வகிக்க வேண்டிய அவசியம் எதுவும் இல்லை. ஒரு சூழ்நிலையை சந்திக்கும்போது

மகிழ்ச்சியும் ஏற்படலாம் அல்லது துன்பமும் ஏற்படலாம். இதை நிழல் என்று புரிந்து கொண்டால் மட்டும் போதும். நிழலை நிர்வகிக்க ஒருபோதும் முயலமாட்டோம். நமக்கு வேலை புறத்தில் (நிஜத்தில்) மட்டுமே என்பதை தெரிந்து கொள்வோம்.

ஐயா கூறும் ஓர் உதாரணம் : நாம் ரோட்டில் நடந்து போய்க்கொண்டு இருக்கிறோம். ரோட்டில் நமக்கு எதிராக ஒரு பஸ் வந்து கொண்டு இருக்கிறது. இந்த இடத்தில் பஸ், பஸ்சை பார்ப்பவன் என்ற நானும் சேர்ந்தே தான் மனதில் ஓர் எண்ணமாக தோன்றுகிறது. வெளி உலகத்தில் பஸ் வேறு, பஸ்சை பார்க்கும் நம்மையும் ஸ்தூலமாகவே வேறுபடுத்தி நம்மால் புரிந்து கொள்ள முடியும். ரோட்டில் வரும் பஸ்சையும், பஸ்சை பார்பவனாகிய நம்மையும் பிரித்தால் தான் பஸ்ஸிலிருந்து நம்மை காப்பாற்றிக் கொள்ள முடியும். இது முழுவதும் நிஜ அம்சம்.

இதே போல் அகத்தில் ஒரு பயம் ஏற்படுகிறது. பயம், பயப்படுபவன் என்ற நானும் சேர்ந்தே தான் மனதில் ஓர் எண்ணமாக தோன்றும். புறத்தில் பஸ்சையும், நம்மையும் ஸ்தலமாக பிரிந்தது போல், அகத்தில் ஏற்படும் பயத்தையும், பயப்படுபவனான நானையும் பிரிக்க வேண்டுமா? அகத்தில் பயம், பயப்படுபவன் என்ற இரண்டு பகுதிகளாக தனித்து தெரிந்தாலும் அதை ஓர் எண்ணமாகவே தான் நாம் உணர்கிறோம். புறத்தில் பொருளையும், நம்மையும் பிரிப்பது போல் அகத்தில் பயம், பயப்படுபவன் என்று இரண்டாக பிரிப்பதுதான் எல்லா பிரச்சனைக்கும் மூலகாரணமாகிவிடுகிறது.

பயப்படுபவனாகிய நான் பயத்தை தன்னுடைய கட்டுப்பாட்டில் கொண்டு வர முயற்சி செய்யும் போது மனமே இரண்டு பகுதியாக பிரிந்து விடுகிறது. பயம் ஒரு பகுதி, பயப்படுபவன் மற்றொரு பகுதி என்று ஒரே மனமே இரண்டாக பிரிந்து ஒன்றை, மற்றொன்று எதிர்த்து முரண்பட்டுக் கொள்கிறது. ஒரே மனதின் இரண்டு பகுதியில் ஏற்படும் முரண்பாடே ஒட்டு மொத்த பிரச்சினைக்கும் மூலக்காரணமாகி விடுகிறது.

இந்த நிகழ்வில் தாமாக ஏற்பட்ட பயம் தாமாகவே மறைந்திடும். அது தாமாக தோன்றி மறையும் நிகழ்வு, பயப்படுபவன் ஆகிய "நான்" தன்னை ஓர் நிழல் என்று புரிந்து கொள்ள முடியும். தன்னுடைய கட்டுப்பாட்டில் பயம் இல்லை என்பதை பயப்படுபவனாகிய "நான்" புரிந்து கொள்ள முடியும். புரிந்து கொண்ட பயப்படுவாகிய நான் தன்னுடைய இயலாமையை ஒப்புக் கொண்டு பயத்தை நிர்வாகம் செய்யும் பொறுப்பிலிருந்து விடுபடுகிறான். அகத்தில் ஏற்பட்ட பயத்தை, புறச்சூழ்நிலையை எதிர்கொள்ள பயப்படுபவனாகிய நான் அறிவை எப்படியும் பயன்படுத்தி செயல் செய்து கொள்ளலாம்.

நம்முடைய நானுக்கு புறத்தில் மட்டும் தான் வேலை. புறம் என்றால் நான் வேறு நான் சந்திக்கும் பொருள் வேறு. பொருள் என்பது ஸ்தூல வடிவம், அதை உணரும் நான் என்பது சூக்கும் வடிவம் ஆகும். அகத்தை பொருத்தவரையில் ஸ்தூல வடிவம், சூக்கும் வடிவம் என்ற இரண்டு பகுதி கிடையாது. ஒரே சூக்கும் வடிவம் மட்டுமே உள்ளது. பார்வைக்கு இரண்டாக தெரியும். பயம், பயப்டுபவன் ஒரே சூக்கும் வடிவத்தின் இரண்டு பகுதிகளே ஆகும்.

அகத்தில் ஸ்தூலம் என்பதே கிடையாது. **"புறத்தில் பகுத்தறிவு அவசியம் தேவை. அப்போதுதான் செயல்பட முடியும். அகத்தில் பகுத்தறிவுக்கு வேலையே இல்லை"**

# ஸ்ரீ பகவத் பவன்

ஸ்ரீ பகவத் மிஷன் குடும்ப உறுப்பினர்கள் அனைவருக்கும் வணக்கம்.

நமது ஸ்ரீ பகவத் பவனில் மே மாதம் 12 மற்றும் 13 ஆம் தேதிகளில் மாணவர்களுக்கான இரண்டு நாள் வாழ்வியல் முகாம் மிகச் சிறப்பாக நடைபெற்றது. இதில் 50 மாணவர்களும் அவர்களது பெற்றோர்களும் கலந்து கொண்டனர். இதில் கலந்து கொண்ட மாணவர்கள் அனைவரும் பயன்பெற்றனர். இது முழுவதும் இலவசமாக நடைபெற்றது.

இந்த வாழ்வியல் முகாம் சிறப்பாக நடைபெறுவதற்கு திரு. **Dr. முத்துகுமார்,** திருச்சி – **ரூ. 10000/-,** திரு. **வெங்கடேசன்,** பெங்களூர் – **ரூ. 10000/-,** திருமதி. **நிருபமா,** சென்னை – **ரூ. 5000/-,** ஆகியோர் நன்கொடை வழங்கியுள்ளார்கள். இவர்களது நன்கொடை, முகாம் சிறப்பாக நடைபெறுவதற்கு மிகவும் பேருதவி புரிந்தன. இவர்களுக்கு உளமார்ந்த நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறோம். நாம் எதிர்கொள்ளும் செலவுகளை ஸ்ரீ பகவத் மிஷனுக்கு வரும் நன்கொடைகளையும் நிறுவனர்கள் மற்றும் புரவலர்களின் பங்களிப்பையும் கொண்டு மட்டுமே எதிர்கொண்டு வருகிறோம்.பகவத் ஐயாவின் கருத்துகளை புரிந்து கொண்டவர்களும் அனைவருக்கும் எடுத்துச் செல்ல வேண்டும் என்ற ஆர்வமுள்ளவர்களும் வாய்ப்புள்ளவர்களாக இருக்கும் பட்சத்தில் நன்கொடைகளை வழங்கி நிறுவனர்களாகவும், புரவலர்களாகவும் இணைந்து ஸ்ரீ பகவத் மிஷனின் தொண்டில் தங்களையும் இணைத்துக் கொள்ளுமாறு பணிவன்புடன் கேட்டுக்கொள்கிறோம்.

அன்புடன்

Sri Bagavath Mission



# ஆசிரியர் பகுதி

K.S. ஜீவமணி
செல் : 97891 65555

அனைவருக்கும் சகப் பயணியின் வணக்கம்.

ஞானமும் விடுதலையும் ஆன்மிகத்தின் உச்சம் மட்டுமல்ல, மனித வாழ்வின் இன்றியமையாதவை.

ஞானம் என்றாலே அமானுஷ்யம் என்றும் எளிதில் அடைய முடியாத ஒன்றாகவும் கருதி வந்த நிலையில் ஞானத்தை அறிவியலாக்கி அனைவருக்கும் பயன்படும் வகையில் எளிமையாக்கி விட்டார் ஸ்ரீ பகவத் ஐயா அவர்கள்.

இந்த மெய் ஞானத்தை - மனத்தின் இயக்க நுட்பத்தை எளிமையாக்கி பள்ளி மற்றும் கல்லூரி மாணவர்களும் புரிந்து கொள்ளும் வகையில் வழங்க ஆரம்பித்து விட்டார் ஸ்ரீ பகவத் ஐயா.

அந்த வகையில் மே மாதம் 12 மற்றும் 13 ஆம் தேதிகளில் சேலம் ஸ்ரீ பகவத் பவனில் நடைபெற்ற இரண்டு நாள் வாழ்வியல் முகாமில் 50 பள்ளி மற்றும் கல்லூரி மாணவர்கள் கலந்து கொண்டு பயனடைந்தனர். இவர்களுடன் இவர்களது பெற்றோரும் கலந்து கொண்டனர். இவர்கள் பெற்ற இந்த மனத்தெளிவு இவர்களுக்கு துயரங்களை கடந்து வாழ்வில் உயரங்களை அடைய வாழ்நாள் முழுவதும் துணை நிற்கும்.

மாணவர்களுக்காக நடைபெற்ற இந்த வாழ்வியல் முகாம் தங்குமிடம், உணவு உட்பட முற்றிலும் இலவசமாக நடைபெற்றது. நமது பகவத் ஐயா அவர்களின் நோக்கமே இந்த ஞானத்தை உலக முழுவதும் கொண்டு செல்ல வேண்டும் என்பது தான். அதனால்தான் ஐயாவின் அனைத்து தமிழ், ஆங்கில நூல்கள் மற்றும் பகவத் பாதை மாத இதழ் என அனைத்தையும் PDF File ஆக இணையதளத்தில் இலவசமாக வழங்கிவருகிறோம்.

இதனோடு ஐயாவின் அனைத்து உரைகளும் ஞான முகாம் நிகழ்ச்சிகளும் Youtube வழியாகவும் கண்டு பயன்படும்படி ஏற்பாடு செய்துள்ளோம். இதனால் ஐயாவை நேரில் சந்திக்காத பலரும் கூட பயனடைந்து வருகின்றனர்.

மேலும் ஸ்ரீ பகவத் பவனில் நடைபெறும் ஞானமுகாம்கள் அனைத்தையும் நாம் இலவசமாகத்தான் நடத்தி வருகிறோம். நாம் எங்கும் எப்பொழுதும் பணத்தை முதன்மை படுத்துவதில்லை. ஐயாவால் எளிமையாக்கப்பட்ட ஞானம் அனைவரையும் சென்டைய வேண்டும் என்ற நோக்கத்தில் செயல்பட்டுவருகிறோம்.

ஞான முகாம்களுக்கும் பராமரிப்புக்கும் நாம் எதிர்கொள்கின்ற செலவுகளை வருகின்ற நன்கொடைகளை வைத்து சரிசெய்யலாம் என எண்ணி வந்தோம். இதற்காகத்தான் புரவலர்கள் குழு ஒன்றையும் அமைத்தோம். புரவலர்களும் 'ஒவ்வொரு மாதமும் வழங்கியே ஆகவேண்டும் என்ற கட்டாயம் எதுவும் இல்லை. விருப்பம்போல் வழங்கலாம்' எனவும் கூறிவிட்டோம். இதன் நோக்கம் நாம் யாரையும் நிர்பந்தப்படுத்தி நன்கொடைகளை வாங்கக்கூடாது என்பதே. இதனால் ஒவ்வொரு மாதமும் தொடர்ந்து வழங்குபவர்கள் வெகு சிலரே. எனவே மீண்டும் ஸ்ரீ பகவத் பவனின் செலவுகளை எதிர்கொள்வதில் ஒவ்வொரு மாதமும் பற்றாக்குறை ஏற்பட்டுக் கொண்டே வருகிறது. பராமரிப்பு செலவு, ஆட்களுக்கு சம்பளம், ஞான முகாம்களுக்கு ஆகும் செலவுகள் என அனைத்தையும் எதிர்கொள்வது மிகவும் சிரமமாக உள்ளது. இதனால் புத்தக விற்பனையில் வரும் தொகையையும் இதற்கே செலவு செய்யும் நிலைக்கு வந்துவிடுவதால் மேற்கொண்டு புத்தகம் அச்சிடுவதும் சிரமமாக உள்ளது.

ஞானத்தை அனைவருக்கும் எடுத்துச் செல்லும் இத்தொண்டிற்கு, உணர்ந்தவர்கள் அனைவரும் தாமாக முன்வந்து உதவவேண்டும் என்று கருதுவதால் யாரிடமும் நாமாக நன்கொடைகள் எதுவும் கேட்பதில்லை. இதனால் பலரும் நாம் நிதிநிலையில் நிறைவாக இருப்பதாக கருதிவிடுகிறார்கள். உண்மையில் நாம் யாரையும் நிர்பந்தம் படுத்தக்கூடாது என்பதில் உறுதியாக இருக்கிறோம். அதே நேரம் நம் அனைவரும் ஒரு குடும்ப உறுப்பினர்களாக கருதுவதால் நமது நிலையை இங்கு வெளிப்படையாகத் தெரிவிப்பது அவசியம் என்பதால் தெரிவிக்கின்றோம்.

மேலும் ஞான முகாம்கள் செலவுகளையாவது எதிர்கொள்ள வேண்டும் என்பதற்காக இனி இதற்காகும் செலவுகளை பகிர்ந்துகொள்ளும் வண்ணம், செலவுப் பகிர்வாக நபர் ஒருவருக்கு ரூ. 1000/- வாங்கலாம் என முடிவு செய்துள்ளோம். மேலும் இதனை வழங்க இயலாதவர்கள் தனிப்பட்ட முறையில் விண்ணப்பிக்கலாம் எனவும் அறிவித்துள்ளோம்.

**ஞானம் என்ற உண்மையை உலகமெங்கும் எடுத்து செல்வது புரிந்து கொண்ட நம் அனைவரின் தலையாய கடமை.** ஸ்ரீ பகவத் ஐயா அவர்களின் முயற்சியாலும் அன்பாலும் நாம் அனைவரும் புரிந்து உயர்ந்து பயனடைந்து இருக்கிறோம். இதற்கு நன்றி உணர்வாக இதனை தேடுதல் கொண்ட அனைவருக்கும் கொண்டு செல்வது நம் அனைவரது கடமை.

**'செய்யாமல் செய்த உதவிக்கு வையகமும்**
**வானகமும் ஆற்றல் அரிது.' – குறள் 101**

எந்த கைமாறும் எதிர்பாராமல் ஐயா, அனைவருக்கும் ஞானத்தை வழங்கி வருகிறார்கள். இதற்கு இந்த மண்ணுலகத்தையும் விண்ணுலகத்தையும் கொடுத்தாலும் கூட ஈடு ஆகாது. இருப்பினும் ஞானத்தை உலக முழுவதும் எடுத்துச் செல்லும் நமது பணிக்கு அனைவரையும் துணை நிற்க வேண்டுகிறோம். அப்படி துணை நிற்கும் அனைவருக்கும் தலை வணங்குகிறோம்.

இந்த மண்ணுலகிற்கு உடலோடு வந்த நாம், என்றாவது ஒருநாள் இந்த உடலை விட்டுவிட்டு சென்றாக வேண்டும்.

விட்டுவிட்டுச் செல்லப் போகின்ற இந்த உடலுக்கு எவ்வளவோ செய்கிறோம். உடன் எடுத்துக்செல்லும் கர்மாவிற்கு என்ன செய்யப்போகிறோம்.

ஞானத்தை அனைவருக்கும் எடுத்துச்செல்லும் இச் சிறந்த பணியை நிஷ்காமியமாக செய்து உலகையே சுபிக்ஷமாக்குவோமாக.

# நிகழ்ச்சி நிழல்கள்



வாழ்வியல் முகாமில் கலந்து கொண்ட மாணவர்களுடன் ஸ்ரீ பகவத் ஐயா



வாழ்வியல் முகாமில்





வாழ்வியல் முகாமில்



வாழ்வியல் முகாமில்



மாணவ மாணவிகள் செடி நடும் போது



வாழ்வியல் முகாமில்

# ஸ்ரீ பகவத் பவனில் ஜுலை மாதத்தில் 2 நாள்
# ஞான முகாம்

ஸ்ரீ பகவத் ஐயா அவர்களின் இரண்டு நாள் ஞான முகாம் வருகின்ற **ஜுலை மாதத்தில்** சேலத்தில் நடைபெற உள்ளது.

இடம் : **ஸ்ரீ பகவத் பவன்,** ஜருகு மலை அடிவாரம், கொடம்பக்காடு, பெரிய கவுண்டாபுரம், காரிப்பட்டி (Po.), சேலம் - 636 106.
Google Search : Sri Bagavath Bhavan (or) Baghavat Bhavan

நாள் : 14.07.2018 முதல் 15.07.2018 ஞாயிறு வரை

நேரம் : சனி காலை 8.00 மணிமுதல் ஞாயிறு மதியம் 3.00 மணிவரை

ஞான முகாமில் கலந்து கொள்பவர்கள் வெள்ளிக்கிழமை மாலையே ஸ்ரீ பகவத் பவன் வந்து தங்கிக்கொள்ளலாம். உங்கள் வருகையை முன் அறிவிப்பு செய்யுமாறு அன்புடன் கேட்டுக்கொள்கிறோம்.

செலவு பகிர்வு ரூ.**1000/-** நபர் ஒருவருக்கு

செலவு பகிர்வுக் கட்டணத்தை வழங்க இயலாதவர்கள் தனிப்பட்ட முறையில் விண்ணப்பிக்கலாம்.

அனைவரும் வருக! ஞானத்தெளிவு பெறுக...

- ஆண்கள் மற்றும் பெண்கள் தங்குவதற்கென தனித்தனி இடவசதி உள்ளன.
- ஞான முகாமில் 50 அன்பர்கள் மட்டுமே கலந்து கொள்ள இடமிருப்பதால் முன்பதிவு அவசியம்.

**முன்பதிவு செய்யும் வழிகள்**

M.O, D.D. (or) Cheque : வரைவோலை அனுப்புபவர்கள் A/c Sri Bagavath Mission என்ற பெயரில் சேலத்தில் செல்லத்தக்கதாக அனுப்புமாறு கேட்டுக்கொள்கிறோம்.

Direct Payment : நேரடியாக வங்கியில் செலுத்துபவர்கள் கீழ்க்கண்ட வங்கிக் கணக்கில் செலுத்தலாம்.
**HDFC Bank Sri Bagavath Mission A/c No. 15907620000075,**
**NEFT IFSC : HDFC 0001590 Car Street Branch, Salem**

**ஸ்ரீ பகவத் மிஷன்**
31, இராமலிங்கசாமி தெரு, அம்மாப்பேட்டை, சேலம்-3. கைப்பேசி : 9994205880, 97891 65555

# ஸ்ரீ பகவத் பவன் புரவலர்கள்

அன்பு உள்ளங்களுக்கு ஓர் அன்பான வேண்டுகோள்.

ஸ்ரீ பகவத் மிஷன் என்பது பணப்புழக்கம் மிகுந்த ஒரு கார்ப்பரேட் நிறுவனம் அல்ல. கட்டணம் வாங்கிக் கொள்ளும் கல்வி நிறுவனமும் அல்ல. ஐயா அவர்களுக்கு தங்கியிருக்க வீடு ஒன்று தேவைப்பட்டது. நம் அனைவரது ஒத்துழைப்பாலும் **ஸ்ரீ பகவத் பவன்** உருவானது. தற்போது அந்த இல்லம் ஐயாவின் இருப்பிடமாகவும், கற்றிட வருவோரின் குருகுலமாகவும், நம் அனைவரது பண்ணை வீடாகவும் செயல்பட்டு வருகிறது. ஸ்ரீ பகவத் பவனின் நித்திய நிர்வாகச் செலவினங்களுக்கான நித்திய நிதி ஒன்றும் தேவைப்படுகிறது.

'நிரந்தர வைப்பு நிதி எதனையும் தற்போது உருவாக்க வேண்டாம்' என்று ஐயா கூறிவிட்டதால் நிரந்தரப் புரவலர் குழு ஒன்றை உருவாக்க முடிவு செய்துள்ளோம். முதற்கட்டமாக 100 ஆர்வலர்கள் கொண்ட புரவலர் குழு ஒன்று மே மாதம் முதல் தொடங்கப்பட்டுள்ளது. அதன்படி ரூ. 1000/- முதல் ஏதாவது ஒரு தொகையை மாதந்தோறும் அல்லது ரூ. 12,000/- முதல் ஏதாவது ஒரு தொகையை வருடந்தோறும் வழங்கும் ஆர்வம் உள்ளவர்கள் தங்களை ஸ்ரீ பகவத்பவனின் புரவலர்களாக இணைத்துக் கொள்ளலாம். **அதற்காக ஏற்றுக்கொண்ட முழுத்தொகையையும் மாதந்தோறும் வழங்கியே ஆகவேண்டும் என்ற நிபந்தனை எதுவும் புரவலர்களுக்குக் கிடையாது.**

வங்கிக் கணக்கில் நேரடியாக செலுத்துபவர்கள் **HDFC Bank Sri Bagavath Mission A/c No. 15907620000075, NEFT IFSC : HDFC 0001590 Car Street Branch, Salem** என்ற கணக்கில் செலுத்தலாம். **Bank A/c-** ல் நேரடியாக செலுத்தியவர்கள் தகவலை **97891 65555** என்ற எண்ணிற்கு தெரிவிக்க வேண்டுகிறோம்.

# ஸ்ரீ பகவத் ஐயாவின் புதிய நூல்




ஸ்ரீ பகவத் மிஷன் குடும்ப உறுப்பினராகிய தங்களுக்கு வணக்கம்.

ஆன்மிகத்தில் தேடுதல் கொண்ட பலரில் எங்கோ ஒருவர்தான் தீவிர முயற்சியில் தோல்வியுற்று சரணாகதியால் ஞானியாக மலர்ந்துள்ளார்கள்.

இப்படி ஞானம் அடைந்தவர்களும் தான் பெற்ற ஞானத்தை தன் உபதேசத்தாலோ பயிற்சி முயற்சியாலோ மற்றவர்களுக்கு வழங்க முடியவில்லை,

ஸ்ரீபகவத் ஐயா அவர்கள் ஆன்மிக தேடலில் தான் பெற்ற ஞானத்தை தன் ஆராய்ச்சியால் அறிவியலாக்கி புரிதலாக வழங்கி வருவதால் ஆர்வமுள்ள அனைவரும் ஞானம் பெறும் அளவிற்கு எளிமையாக்கி விட்டார்.

இதுவரை அமானுஷ்யமாக இருந்த ஞானத்தை அறிவியலாக மாற்றி அனைவரும் பயன்பெறும் அளவிற்கு உயர்த்திய பெருமை ஸ்ரீ பகவத் ஐயா அவர்களையே சாரும்.

ஐயாவால் பயனடைந்த பலரும் ஐயாவின் வாழ்க்கை வரலாற்றை தெரிந்து கொள்ள ஆர்வம் காட்டியதால் **சிறு வயது முதல் தனக்கு ஏற்பட்ட அனுபவங்கள், பள்ளி மற்றும் கல்லூரி காலங்களில் நடந்த நிகழ்வு, ஆன்மிகத்தின் பக்கம் தேடுதலை திசை திருப்ப திருப்புமுனையாக அமைந்த நிகழ்வு, அதன் பிறகு ஆன்மிக தேடலில் தான் அடைந்த அனுபவங்கள், எதிர்கொண்ட பிரச்சினைகள், ஞானமடைந்த தருணம்** என தனது வாழ்க்கை பயணத்தை **பகவத் பயணம்** என்ற தலைப்பில் நூல் ஒன்றை எழுதியிருக்கிறார் ஸ்ரீ பகவத் ஐயா அவர்கள்.

இந்நூலில் ஐயாவின் சிறுவயது, பள்ளிப்பருவம், கல்லூரி மாணவராக மற்றும் தற்போது வரை உள்ள புகைப்படங்கள் என அனைத்தையும் இணைத்து நூலின் இருபுறமும் படிக்குமாறு புதுமையாக அச்சிட்டுள்ளோம். இந்நூல் ஜூலை ஞான முகாமில் வெளியிட உள்ளோம் என்பதை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்கிறோம். **நூல் பிரதியின் விலை ரூ. 500/-.** தேவைப்படுவோர் முன்பதிவு செய்யலாம்.

வங்கிக் கணக்கில் நேரடியாக செலுத்துபவர்கள் **HDFC Bank Sri Bagavath Mission A/c No. 15907620000075, NEFT IFSC : HDFC 0001590 Car Street Branch, Salem** என்ற கணக்கில் செலுத்தலாம். **Bank A/c-** ல் நேரடியாக செலுத்தியவர்கள் தகவலை **97891 65555** என்ற எண்ணிற்கு தெரிவிக்க வேண்டுகிறோம்.




இளைஞன் ஒருவனை அவன் வேலை பார்க்கும் இடத்தில் "நீ சரியல்லை, உனக்கு திறமையில்லை" என்ற வசைபாடும் உயர் அதிகாரியின் பேச்சுகள் அவனை வாட்டி வதக்கி எடுத்தன. இதுபோக நண்பர்கள், குடும்பத்தில் உள்ளார்கள். உறவினர்கள் என பலரின் ஏச்சும், பேச்சும் அவனை மேலும் பாதித்து தாழ்வுமனப்பான்மையை உருவாக்கியது. தாழ்வு மனப்பான்மையிலிருந்து விடுபடுவதற்காக பல பயிற்சி, முயற்சிகளை மேற்கொண்டான். பயிற்சியின் முடிவில் கொஞ்ச நேரம் நன்றாக இருப்பதுபோல் தெரியும். ஆனால் அந்த மனநிலையை அப்படியே நீடிக்க முடியாமல் தவிப்பான். பயிற்சிகளும், முயற்சிகளும் ஓர் அளவிற்கு உதவின, முழுமையாக உதவவில்லை. விடை தேடி மலையில் வாழும் ஓர் ஞானியை சந்தித்து தன்னுடைய தாழ்வு மனப்பான்மை பிரச்சினையை பற்றி கூறி, அதிலிருந்து நீங்கள் தான் எப்படியாவது மீட்க வேண்டும் என்று அவர் பாதங்களில் விழுந்தான்.

"தாழ்வு மனப்பான்மை என்று நீ எதைக் கூறுகிறாய்?" என்றார் ஞானி.

"மற்றவர்களை போல் வேலையை சரியாகவும், திறமையாகவும், நிதானமாகவும் செயல்படும் தன்மை எனக்கு இல்லை என்று தோன்றுகிறது. புதியதாக வேலைக்கு வருபவர்கள், வயதில் என்னைவிட மிக குறைந்தவர்கள் கூட நன்றாக வேலை செய்கிறார்கள். நான் எந்த வேலையை எடுத்தாலும் சொதப்பிவிடுவேனோ, என்னுடைய வேலையை சரியில்லை என்று யாரும் கூறி விடுவார்களோ என்று சதா எண்ணிக்கொண்டே

இருப்பதனால் எப்போதும் மனநிறைவின்றி ஒரு தாழ்வு மனப்பான்மையிலேயே வாழ்ந்து வருகிறேன்" என்றான் இளைஞன்.

"நீ பார்க்கும் வேலையை எப்படி செய்யவேண்டும் என்ற அறிவு உள்ளதா? இல்லை உன் வேலையை சரியாக செய்வதற்கான திறமை இல்லையா? உனக்கு திறமை இல்லாமல் இருந்தால், நீ எப்படி இத்தனை படிப்புகளை எல்லாம் படித்திருப்பாய்? உன்னை எப்படி ஆய்வு செய்து நிறுவனத்தில் வேலைக்கு சேர்த்திருப்பார்கள்?" என்றார் ஞானி.

"நானும் மற்றவர்களை போல் நன்றாக படித்துதான் வேலைக்கு சேர்ந்தேன். உயர் அதிகாரியின் பேச்சும், சக நண்பர்களின் புறக்கணிப்பும், உறவினர்களின் அவமரியாதையும் நான் மற்றவர்களை காட்டிலும் திறமையும், புத்திசாலிதனமும் இல்லாதவனாக எண்ணிக்கொள்வேன். "நான் திறமை இல்லாத நபர், என்னால் எதுவும் செய்யமுடியாது" என்று என்னை நானே எண்ணிக்கொள்வேன். அதனால் என்னால் எந்த வேலையும் சரியாக செய்யமுடியவில்லை, ஏதோ தவறு நிகழ்ந்துவிடுமோ என்ற பயம் இருந்து கொண்டே இருக்கும். மற்றவர்கள் நம்மை கேவலமாக நினைப்பார்களோ என்று சதா எனக்குள் எண்ணிக் கொண்டே இருப்பேன்" என்றார் இளைஞன்.

இளைஞனின் பிரச்சினையை நன்றாக புரிந்து கொண்ட ஞானி, அவன் பிடித்துக்கொண்டு இருக்கும் தாழ்வு மனப்பான்மை பிரச்சனையிலிருந்து வெளிவருவதற்கு ஓர் எளிய வழிமுறையை அன்று இரவு அவனுக்கு புரியும்படி கூறினார்.

ஞானி இரவு நேரத்தில் எங்காவது வெளியே செல்ல வேண்டும் என்பதற்காக ஒரு பெரிய டார்ச் லைட்டை வைத்திருந்தார். இளைஞனை அருகே அழைத்து டார்ச் லைட்டை எடுத்து அடித்து மலையின் அடிவாரத்திலிருந்து அவரது ஆஸ்ரமத்திற்கு வரும் பாதைகளை எல்லாம் காட்டினார்.

இளைஞன் "ஆமாம் சாமி இந்த பாதை வழியாகத்தான் நானும் ஆஸ்ரமத்திற்கு வந்தேன்" என்றான்.

ஞானி அவனுக்கு நேர் எதிராக போய் நின்று கொண்டு டார்ச்சு லைட்டை அவனது முகத்திற்கு நேராக அடித்தார். "இப்போது உனக்கு என்ன, என்ன தெரிகிறது? சொல்" என்றார்.

"சாமி வெளிச்சம் கண்களை கூசுகிறது. கண்கள் எரிகிறது. டார்ச் லைட் அடிக்கும் உங்களை கூட சரியாக பார்க்க முடியவில்லை, எனக்கு எதிராக இருக்கும் எதுவும் தெரியவில்லை" என்றான் இளைஞன்.

ஞானி திரும்பவும் டார்ச் லைட்டை ஆஸ்ரமத்திற்கு வரும் பாதையின் மீது அடித்துக் காட்டினார். "பாதைகள் தெரிகிறதா" என்றார்.

"ஆஸ்ரமத்திற்கு வரும் பாதைகள் தெளிவாக தெரிகிறது" என்றான் இளைஞன்.

"உன் முகத்திற்கு நேராக டார்ச் லைட் அடித்தேன் உனது கண்களால் அந்த வெளிச்சத்தை தாங்க முடியவில்லை. டார்ச் அடிக்கும் நான் உட்பட, வெளியே இருக்கும் எதுவும் தெரியவில்லை. அதே டார்ச் லைட்டை உன் முகத்திற்கு நேர் எதிரான வெளிப்பக்கத்தின் மீது அடிக்கும்போது அந்த வெளிச்சமே நீ வந்து சேரவேண்டிய பாதையை தெளிவாக காட்டுகிறது இல்லையா?" என்றார் ஞானி.

மிகுந்த உற்சாகத்துடன் "ஆமாம் சாமி" என்றான் இளைஞன்.

"இதிலிருந்து நீ என்ன புரிந்து கொண்டாய்" என்றார் ஞானி.

"டார்ச் லைட்டின் வெளிச்சத்தை நம் மீது அடிக்காமல் நமக்கு நேர் எதிரான திசையில் அடிக்கும் போது வெளியே என்ன இருக்கிறது என்பது நமக்கு நன்றாக தெரிகிறது சாமி" என்றான் இளைஞன்.

"உனது பிரச்சனையும் இதுதானே" என்றார் ஞானி.

"ஏதோ புரிகிறது அதை இன்றும் கொஞ்சம் எனக்கு புரியும்படி கூறுங்கள் சாமி" என்றார் இளைஞன் உற்சாகத்துடன்.

"நம்மிடம் இருப்பது ஒரே வெளிச்சம் தான். அதை நம்மீது செலுத்துவதா? அல்லது நாம் செய்ய வேண்டிய புறச்செயலின் மீது செலுத்துவதா?" என்றார் ஞானி.

"நாம் செய்ய வேண்டிய புறச்செயலின் மீது தான் வெளிச்சத்தை செலுத்த வேண்டும்" என்றான் இளைஞன்.

"இவ்வளவு காலம் நீ என்ன செய்து கொண்டு இருந்தாய் என்பது புரிகிறதா?" என்றார் ஞானி.

"நன்றாக புரிகிறது சாமி என்றான். என் மீது வெளிச்சத்தை அடித்துக் கொண்டு, இவ்வளவு நாட்கள் நான் சரியில்லை, எனக்கு திறமையில்லை, நிதானமில்லை என்று என்னை நானே, எண்ணிக்கொண்டு என்னை சரிசெய்வதற்கு முயன்றிருக்கிறேன். அதனால் நான் செய்ய வேண்டிய வேலையை சரியாக செய்யாமல் இருந்துவிட்டேன். இனி என்மீது வெளிச்சத்தை அடிப்பதை விடுத்து எனக்கு எதிராக உள்ள வெளிபுறத்தின் மீது வெளிச்சத்தை அடித்து நான் செய்ய வேண்டிய வேலைகளை அறிவுபூர்வமாக செய்வேன்" என்றான் இளைஞன்.

"சாமி எனது தாழ்வு மனப்பான்மை சரியாகிவிடுமா?" என்றான் இளைஞன்.

"வெளிச்சத்தை போல் உன் கவனத்தை உனக்கு வெளியே செலுத்தினால் நீ செய்ய வேண்டிய வேலையை எல்லாம் எப்படி செய்ய வேண்டும் என்ற அறிவு உன்னிலிருந்து வெளிப்படும். உன் மீது வெளிச்சத்தை அடிப்பதை விட்டுவிடுவதைப்போன்று உன் கவனத்தை உன் அகத்தில் இருக்கும் தாழ்வு மனப்பான்மை மீது செலுத்தாவிட்டால் காலப்போக்கில் தாழ்வு மனப்பான்மையும் தாமாகவே மறைந்துவிடும்" என்றார் ஞானி.

இருண்ட முகத்துடன் வந்த இளைஞனின் முகத்தில் தெளிவு பிறந்தது தன்னுடைய பிரச்சினையின் ஆணிவேரை கண்டுபிடித்து, அதை எப்படி சரிசெய்ய வேண்டும் என்ற வழிமுறையை எளிமையாக தனக்கு புரியவைத்த ஞானியை, கடவுளே வானிலிருந்து கீழிறங்கி ஞானியின் உருவத்தில் வந்து தனக்கு புரியவைத்தாக எண்ணிக்கொண்டான். இவ்வளவு நாட்கள் இது புரியாமல் பல நாள் சேர்த்து வைத்த மனப்பாரமெல்லாம் புரிதல் என்ற தீயாக எரிந்து கொண்டு இருப்பதாக தனக்குள் உணர்ந்தான் இளைஞன்.

புரிதல் என்ற பேரொளியுடன் புறத்தே செயலற்ற புறப்பட்டான் இளைஞன்.

**Registration Number of the Registered News Paper TNTAM/2014/57698**
**Postel Registration Number : TN/WR/SL(E)/22/2018-2020 Posted at Salem HOP 636001. On 10th of every month.**

**Published by Shri. V.A.P. Sharavanan on behalf of the Sri Bagavath Mission, 31, Ramalingasamy Street, Ammapet, Salem-636 003. Tamilnadu. India.**
**Printed by Shri. R. Jayavel at Sree Jayavel Press, 08/11, Gandhi Maidanam, Ammapettai, Salem-636 003. Editor : Shri. K.S. Jeevamani Cell : 97891 65555**